# தமிழீழ எழுச்சிப் பாடல்கள்

## பாகம் 4



# தமிழீழ எழுச்சிப் பாடல்கள்

## பாகம் - 4



வெளியீட்டுப் பிரிவு,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.

○ தமிழீழ எழுச்சிப் பாடல்கள்

பாகம் - 4

○ முதற்பதிப்பு : ஆடி 1993

○ வெளியீடு : வெளியீட்டுப் பிரிவு,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.

○ அன்பளிப்பு : [redacted] ரூபா 30/-



பக்கம்

# பாடல்களுக்கு முன்...

தமிழீழ விடுதலைப் போராட்டத்தை வேகம் கொள்ள வைக்கும் கலை - இலக்கியப் படைப்புக்களில், ஒலிப்பதிவு நாடாக்களாக வெளிவரும் எழுச்சிப் பாடல்களுக்கு கணிச மான பங்குண்டு. உணர்வால் எங்கும், எப்போதும், எவரை யும் ஈர்க்கும் சிறப்பு இந்த விடுதலைப் பாடல்களுக்கு உரியது.

மனிதனின் உணர்வுகளைத் தூண்டக்கூடிய பக்குவம் இசைக்குண்டு. இந்த இசைப்பாடல்கள் நாம் வாழும் காலத்து நிகழ்வுகள், நமது சிந்தனைகள், இக்காலத்து வீரமிகு சிறப்பு கள் அனைத்தையும் கொண்டிருப்பதால், அனைவரது இதயத் துக்குள்ளும் ஊடுருவி வாழ்கின்றன.

பாடலின் பொருள், இசை நெறியாள்கை, இசைக்கலை ஞர்களின் கூட்டு உழைப்பு, பாடகர்களின் திறமை, ஒலிப் பதிவு நுணுக்கம் என்பன ஒருங்கிணையும்போது பாடல்கள் சிறப்படைகின்றன - இலகுவாக மக்களின் மனங்களில் இடம் பெறுகின்றன.

ஒருகாலத்தில் சாதாரண சினிமாப் பாடல்களையே உச் சரித்துக்கொண்டிருந்த உதடுகள் இன்று, எங்கள் தாயக விடுதலைப் பாடல்களை உரத்துப்பாடும் அளவுக்கு, எமது எழுச்சிப் பாடல்கள் ஓங்கி உள்ளன.

தேசம் மீதான பற்றுணர்வை, எதிரிக்கெதிரான போர்க்குணத்தை இந்தப் பாடல்களும் ஊட்டிவிட்டுள்ளன.

போர் ஏற்படுத்திவரும் தாக்கங்கள் அனைத்தையும் எதிர் கொண்டபடி எழுச்சிகொள்ளவைக்கும் கலைவடிவமாக, இந்தப் பாடல்கள் இன்று எங்கள் தேசத்தில் ஒலிக்கின்றன.

இது நூலுருப் பெறுகின்ற தமிழீழ எழுச்சிப் பாடல்கள் வரிசையில் எமது நான்காவது வெளியீடாகும்.

இந்நூலில் - கேணல் கிட்டு அவர்களின் நினைவுப் பாடல் களுடன், மேலும் ஐந்து ஒலிநாடாக்களின் பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

விடுதலைப் புலிகளின் கலை பண்பாட்டுக்கழகம் உருவாக்கிய தளபதி கிட்டு நினைவுப் பாடல்களுக்கும், ' கரும்புலிகள் பாடல்களுக்கும் இசை நெறியாள்கையை கண்ணன் அவர்கள் செய்துள்ளார். விடுதலைப் புலிகளின் மகளிர் அமைப்பினால் வெளியிடப்பட்ட ' விழித்தெழுவோம் ' இசைநாடாப் பாடல் களுக்கும் இசை நெறியாள்கையைக் கண்ணன் அவர்களே செய்துள்ளார்.

தலைவர் அவர்களால், கண்ணன் அவர்களுக்கு அளிக்கப்பட்ட தங்க விருது, ' கரும்புலிகள் ' இசைநாடா வெளியீட்டு விழாவில் வைத்து வழங்கப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

' நிதர்சனம் ' நிறுவனம் உருவாக்கிய ' கூவு குயிலே' பாடல் களுக்கான இசை நெறியாள்கையை ராஜன் குழுவினரும், ' செஞ்சோலை 'சிறுவர்களின் பாடல்களுக்கான இசை நெறியாள் கையை முரளி அவர்களும், யாழ். பல்கலைக்கழக மாணவர் ஒன்றியத்தால் வெளியிடப்பட்ட ' விடியலைத் தேடும் பறவை கள் ' பாடல்களுக்கான இசை நெறியாள்கையை யாழோசை கண்ணன் அவர்களும் செய்துள்ளனர்.

வெல்லப்போகும் எங்கள் தர்மயுத்தத்தில் கணிசமாகப் பங்க ளிக்கும் இந்தப் பாடல்களை உருவாக்கிய அனைத்துக் கரங் களையும், நாம் உளமார்ந்த அன்புடன் பற்றிக்கொள்கின்றோம்,

'புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்.'

# தளபதி கிட்டு நினைவுப் பாடல்கள்

பாடலாசிரியர்: புதுவை இரத்தினதுரை
பாடியவர் : சிட்டு

பல்லவி

தளராத துணிவோடு களமாடினாய் - இன்று
தமிழீழ நினைவோடு படகேறினாய்
அழகான திருமேனி தணலானதோ? – இந்தி
அதிகாரம் உனக்கிங்கு எமனானதோ

சரணம்

நீ நடந்த பாதையெங்கும் பூ மலர்ந்தது – தமிழ்
ஈழமெங்கும் உந்தனது பேர்கலந்தது
தாயகத்து போர்க்களத்தில் நீ முழங்கினாய் – தம்பி
தானையிலே தளபதியாய் நீ விளங்கினாய்
(தளராத துணிவோடு ...)

அமைதிதேடி வந்தபுறா சிறகிழந்தது – கொடும்
அரக்கர்களின் அம்புபட்டுத் துடிதுடித்தது
இமயநாடு உந்தனுக்குக் குழிபறித்தது – உன்னை
இழந்ததினால் எங்கள் நெஞ்சு பதைபதைக்குது
( தளராத துணிவோடு ... )

சிங்களத்துப் படைகளோடு போராடினாய் – வந்த
இந்தியர்களோடும் அன்று வாதாடினாய்
பொங்குகின்ற புலிகளுக்கு வழிகாட்டினாய் – இன்று
புயல்படுத்த யாத்திரியாய் விழிமூடினாய்
(தளராத துணிவோடு...)

பாசத்தோடு ஈழமக்கள் நெஞ்சை ஆளுவாய் – பிர
பாகரனின் தம்பியாகி என்றும் வாழுவாய்
ஆசையோடு தேசம்காண வந்தவீரனே! – கிட்டு
அண்ணன் என்ற பேரெடுத்த எங்கள் தேவனே!
(தளராத துணிவோடு ...)

# தளபதி கிட்டு நினைவுப் பாடல்கள்

பாடலாசிரியர்: புதுவை இரத்தினதுரை
பாடியவர் : சிட்டு, பொன். சுந்தரலிங்கம்

### தொகையறா

தளபதி கிட்டு, தலைவனின் குட்டிசிறி எனும் தம்பியும் எங்கே?
மலரவன், ஜீவா, நாயகன், றொசான் என்றிடும் வேங்கைகள் எங்கே?
புலி குணசீலன், தூயவன், அமுதன், நல்லவன் என்பவர் எங்கே?
போர்முகத்தேறி புயலெனவீசி பொங்கிய வீரர்கள் எங்கே?

### பல்லவி

எங்கே எங்கே வேங்கைகள் எங்கே?
இந்திய அரசே! பதில் சொல்லு - இவர்
சந்தனமேனி செந்தணலான
சங்கதி தெரியும் பதில்சொல்லு
எங்கே ...... எங்கே ......

### சரணம்

பொங்கிடும் கடலில் புலிமறவீரர்
போய்வரக்கூட முடியாதா? - நாம்
எந்தையர் கடலில் எழுந்திடக்கூட
இந்திய நாடு தடைதானா
தடைதானா ...... தடைதானா ...
(எங்கே எங்கே...)

தீலீபனைக் கொன்றும் தீருவில் வெளியில்
தீயினை மூட்டியும் நின்றாய் - இன்று
பலியெடுத்துந்தன் பற்களில் ரத்தப் பாலினுக்காகவா கொன்றாய்

தாயகம் நோக்கி வீசிய புயல்களைத்
தடுத்தது இந்திய அரசு - இனிக்
காவிய நாயகன் காட்டிடும் பாதையில்
களத்தினில் கேட்டிடும் முரசு
முரசு ...... எங்கள் முரசு ......

(எங்கே எங்கே ..)

கடலில் வெடித்த கப்பலில் இருந்து
கரும்புலி ஆயிரம் பாயும் - உன்னைத்
தடவும் தென்றல் காற்றும் இனிமேல்
தணலாய்த்தானே வீசும்

( எங்கே எங்கே ......)

□ □ □

# தளபதி கிட்டு நினைவுப் பாடல்கள்

பாடலாசிரியர்: என். சண்முகலிங்கன்
பாடியவர் : சிட்டு

தொகையறா

நெஞ்சிலே ரத்தம் கொட்டும் நினைவே நெருப்பாகும் - எங்கள்
நெஞ்சினிய தோழர்களின் தியாகத்திலே

முத்த மகன் அவன் தோழர் குட்டிசிறி
மலரவன் ஜீவா குணசீலன்
றொசாந்தன் நாயகன் தூயவன் நல்லவன்
இந்திய துரோகத்தால் கனலான செய்தியில்

நெஞ்சிலே ரத்தம் கொட்டும்
நினைவே நெருப்பாகும்–எங்கள்
நெஞ்சினிய தோழர்களின் தியாகத்திலே

பல்லவி

கடலம்மா
எங்களுக்கு நீதிசொல்ல எவருமில்லையா

சரணம்

தேச விடுதலைக்காய் தேசமெல்லாம் திரிந்த–எங்கள்
நேச குழந்தைகளை நீசர் வழிமறிக்க
(கடலம்மா...)

உலக கடற்பரப்பில் இந்தியப் பேயாட்சி
உண்மையை தின்னுமா? உலகம் மௌனமாகுமா?
(கடலம்மா...)

தாயக பயணத்திலே தம்பி கிட்டு தோழருடன்
தியாக வேள்வியிலே தணலாக போகையிலும்
(கடலம்மா...)

## தளபதி கிட்டு நினைவுப் பாடல்கள்

வானும் கடற்பரப்பும் உலகமதும் உள்ளவரை
தாயக தாகம் தணிவதில்லை - எந்த
தடையிலும் பயணம் நிற்பதில்லை

எங்கள் தம்பி கிட்டு தோழர்மீது ஆணையம்மா
எங்கள் தம்பி கிட்டு தோழர் தேசம் நாளையம்மா

நெஞ்சிலே ரத்தம் கொட்டும் நினைவே நெருப்பாகும்
எங்கள் நெஞ்சினிலே தோழர்களின் தியாகத்திலே

102031

□ □ □

# தளபதி கிட்டு நினைவுப் பாடல்கள்

பாடலாசிரியர்: யோகி
பாடியவர் : கபிலன்

பல்லவி

வான் வழியில் வந்த செய்தி கனவாக மாறாதோ
மாண்டாய் நீ என்ற செய்தி பொய்யாகிப் போகாதோ
தன் மானம் காத்தவனே மனம் மகிழ வாராயோ
தமிழீழ தாய் மடியை நீ வந்து சேராயோ
(வான் வழியில்...)

சரணம்

தனி மரம்தான் தோப்பாவதில்லை எனச் சொல்வார்
தனிமனிதன் பெரும் படையாய் நின்றதனைக் கண்டார்
நீ இருந்தால் எம் அருகில் பெரும் படையும் எதற்கு
நீ இல்லை என்று சொல்ல நெஞ்சம் இல்லை எனக்கு
(வான் வழியில்...)

காலிழந்தும் நல்லூரான் வீதிதனில் எழுந்தாய்
கடலெனவே நின்ற மக்கள் கந்தனையா தொழுதார்
விம்மி விம்மி அழுத மக்கள் உந்தனையே தொழுதார்
வீரன் நீ இங்கிருக்க அச்சமில்லை என்றார்
(வான் வழியில்...)

சிறிய படை கொண்டெங்கள் திசையாவும் காத்தாய்
திரண்ட படை இங்கிருக்க நீ எங்கே போனாய்
அடியெடுத்து நீ நடந்த தெருவெங்கும் சோகம்
கிட்டு அண்ணா நீ வளர்த்திட்ட தாயகத்தைப் பாரும்
(வான் வழியில்...)

## செஞ்சோலைப் பாடல்கள்

பாடலாசிரியர் நாவண்ணன்
பாடியவர்கள் : மணிமொழி, விதுசா.

பல்லவி

சோலைக்கிளிகள் சொல்லும் கதைகள் சொந்தக்
கதைகள்
சோகத்தையும் வென்று நிற்கும் விந்தைக் கதைகள்
(சோலைக்கிளிகள்...)

சரணம்

குரங்கு வந்து கூட்டைப் பிரிக்க குருவிக் குடும்பம்
,சிதைந்தது
குருவிக் குஞ்சு நிலத்தில் வீழ்ந்து குற்றுயிராய் துடித்தது
வருந்தும் குஞ்சின் வாழ்வுகாக்க வாசல்
ஒன்று திறந்தது
வாசம் வீசும் அன்பு நெஞ்ச சோலை இங்கு மலர்ந்தது
– செஞ்
சோலை இங்கு மலர்ந்தது
(சோலைக்கிளிகள்...)

பிறந்த வீட்டில் சேர்ந்து வாழ கொடுத்துவைக்க
வில்லையே
பிரிந்தவர்கள் தந்த சுமையை சேர்த்துக்கொள்ள
வில்லையே
எரிந்த பார்வை ஏச்சுக்களை இதயம் தாங்கவில்லையே
ஏன் பிறந்தோம் என்றழுதோம் இன்று கவலை இல்லையே
– எமக்கு
இன்று கவலையில்லையே
(சோலைக்கிளிகள்...)

அன்னை தந்தை இல்லையென்ற அழுகையிங்கு
இல்லையே
அன்புச் சோலை தன்னில் கூவும் சின்னக் குயில்கள்
நாங்களே
சின்னக் குயில்கள் பாடல் கேட்டு சிரிக்கும் தந்தை
தாய்களே
இந்த மண்ணில் நாங்களெல்லாம் ஈழத்தாயின் சேய்களே
– தமிழ்
ஈழத்தாயின் சேய்களே
(சோலைக்கிளிகள்...)

□ □ □

# செஞ்சோலைப் பாடல்கள்

பாடலாசிரியர்: காயத்திரி
பாடியவர் : செல்வன் இ.ஜெயமுதன்

**பல்லவி**

பிஞ்சுவயதிலே எங்கள் உள்ளம் அழுதது
வஞ்சமில்லா எங்களுக்கு வாழ்வு கசந்தது
துள்ளியோடும் பருவத்திலே துவண்டிருந்தோம் - நாம்
பள்ளி செல்ல வசதியின்றி நொந்திருந்தோம்
(பிஞ்சு வயதிலே ...)

**சரணம்**

இன்னல்கள் பட்டுப்பட்டு எம்மிதயம் வலித்தது
இரக்கமற்ற வதைகளால் எம்முடலும் களைத்தது
துடித்தோம் துவண்டோம் துணையின்றித் தவித்தோம்
மீட்க வருவார் யாரென்று விழி பூக்கக் காத்திருந்தோம்
(பிஞ்சு வயதிலே ...)

வாழ்வினில் ஒளிகூட்டவென்று மலர்ந்தது ஒரு சோலை
செஞ்சோலை வந்து சேர்ந்தோமே நாமெல்லாம் பூமாலை
தளரோம் தயங்கோம் தலைநிமிர்ந்தெழுவோம்
தாயகத்தை காத்திட வீரராய் எழுந்திடுவோம்
(பிஞ்சு வயதிலே ...)

செஞ்சோலைக் குயில்களாகி சிறகடித்தோம் சிறை யுடைத்தோம்
செம்மையான நோக்கறிந்தோம் நல்லவழி நாம் தெரிந்தோம்
துணிந்தோம் துயர் மறந்தோம் துடிப்புடன் எழுந்தோம்
தூய பாதைதனில் நாமிங்கு தெளிவுடனேநடந்திடுவோம்
(பிஞ்சு வயதிலே ...)

# செஞ்சோலைப் பாடல்கள்

பாடலாசிரியர்: நாவண்ணன்
பாடியவர்கள் : காஞ்சனா, ஜாழினி

பாலர் நாங்கள் பாடுவோம் பாட்டுப்பாடி ஆடுவோம்
சோலை எங்கள் வீட்டிலே சேர்ந்து ஒன்றாய் வாழு
வோம்
நாங்கள் நல்ல பிள்ளைகள் நாளை எங்கள் நாட்டிலே
நீங்கள் எல்லாம் போற்றிட நிச்சயமாய் வாழுவோம்

பல்லவி

சின்னச்சின்ன ரோஜாக்கள் செஞ்சோலை வளர்ப்பூக்கள்
அன்பு என்னும் தேன் கூட்டில் அணிதிரண்ட தேனீக்கள்
(சின்னச்சின்ன ரோஜாக்கள்...)

சரணம்

பருவமழைக் கேங்குகின்ற பயிர்களாக வாடி
பகலிரவு தெரியாத இருளில் வழி தேடி
பார்ப்பவர்கள் முகங்களிலே பாசத்தையே நாடி
பாலகர்கள் பருகவந்தோம் பசுஞ்சுனையில் கூடி
(சின்னச்சின்ன ரோஜாக்கள் )

அண்ணாவின் நிழலினிலே அடைக்கலமாய் வந்தோம்
- அன்பு
செய்யும் கரங்களிலே அன்னைசுகம் கண்டோம்
திக்கறியா நிலையினிலே திசையறிந்துகொண்டோம்
- தேடி
நிற்கும் உறவையெல்லாம் தேற்றுவோரில் கண்டோம்
(சின்னச்சின்ன ரோஜாக்கள்...)

பட்டதுயர் பாடுகளை பாடிப்பாடி நில்லோம் - மொட்ட
விழ்ந்து
முகைவெடித்து மணம் பரப்பிச் செல்வோம்
பட்டைதீட்ட பெற்ற வைரம் பக்குவம் எம் நெஞ்சம் -
வெட்டிவிட்ட
மரம் தழைத்து விருந்தளிக்கும் கனிகள்
(சின்னச்சின்ன ரோஜாக்கள்...)



□ □ □

பாடலாசிரியர்: நாவண்ணன்
பாடியவர் : செங்கதிர்

பல்லவி

விடியும் என்று காத்திருந்தோம் இருள் கவிந்தது–விழி
திறந்து பார்த்திருந்தோம் அழுகை வந்தது
மடியும் என்று சாபம் இங்கு யார் கொடுத்தது–இந்த
மண்ணில் நாங்கள் அடிமை என்று யார் உரைப்பது
(விடியும் என்று—)

சரணம்

யாழினிது குழலினிது யாவினிலுமே யாமுரைக்கும்
மொழியினிது என்ற தமிழனே
வாழ்வினிது என்றறியா வாழ்வு வாழ்வதோ
வளரும்முளை கருகுவதில் பெருமைசேருமோ
(விடியும் என்று...)

தாயின் முகம் தந்தை முகம் மறந்து போச்சுதோ
தலைவன் முகம் தோன்றி நெஞ்சில் உறுதி ஊட்டுதே
வாய்திறந்து வாழ்கவென்று வாழ்த்துப் பாடுதே
வளம் நிறைந்த ஈழம்காண மனசு நாடுதே
(விடியும் என்று...)

சங்கொலிக்க எங்கள்கொடி விண்ணில் ஆடிடும்
சந்ததிக்கு வென்றகதை சாற்றிப் பாடிடும்
எங்கள் வாழ்வின் விளக்கொளிர எண்ணெயானவர்
எண்ணிலாத தியாகவழி கால்கள் நாடிடும்
(விடியும் என்று—)

## செஞ்சோலைப் பாடல்கள்

பாடலாசிரியர்: நாவண்ணன்
பாடியவர் : விதுசா

**பல்லவி**

செஞ்சோலைத் தங்கங்களே செந்தமிழின்
செல்வங்களே
தாயங்கு காத்திருக்க தந்தைவழி பார்த்திருக்க
தம்பி தங்கை உறவுகளை விட்டோம் - தாய்
மண்ணின் பற்றை மட்டும் தொட்டோம்
பற்றறுத்து வந்த எம்மை பாசத்திலே நனைய வைத்தீர்
வற்றாத அன்பினிலே வாழ்வின் சுவை உணரவைத்தீர்
(செஞ்சோலைத் தங்கங்களே—)

**சரணம்**

சொப்பனத்தில்கூட செஞ்சோலை மழலைகளே
- எப்போதும்
உம்முடனே நாங்கள் ஏன் கலங்கவேண்டும் இன்னும்
நீங்கள்
தங்கைகளே எம்முறவு தாய்பிள்ளை உறவு அம்மா
சங்கையுற நீர் வளர்ந்தால் சாந்தியுறும் எம்மனது
(செஞ்சோலைத் தங்கங்களே...)

துப்பாக்கி ஏந்தும் கரம் தொட்டிலாகி 'அசைகிறது
துன்பமற்ற வாழ்வுதர துடிக்குது
தூயவராய் வாழவைக்கத் தவிக்குது
சந்ததியை வாழ வைப்போம் சத்தியத்தை
ஊட்டிவைப்போம்
சிந்தைக்கிது இனிமையடி சிந்துநகைச் சித்திரமே
(செஞ்சோலைத் தங்கங்களே...)

## செஞ்சோலைப் பாடல்கள்

பாடலாசிரியர்: பொன். கணேசமூர்த்தி
பாடியவர் : சிட்டு

பல்லவி

சோலையிலே பாடும் — செஞ்
சோலையிலே பாடும்
பூங்குயில் கீதங்கள் கேட்கிறதா — தமிழ்
பூங்குயில் கீதங்கள் கேட்கிறதா
ஈழத்தின் திசைகளிலே — தமிழ்
ஈழத்தின் திசைகளிலே பூங்குயில் கீதங்கள் கேட்கிறதா
— புயல்
தாங்கிடும் கீதங்கள் கேட்கிறதா
(சோலையிலே பாடும்...)

சரணம்

மானிட விலங்குகள் கால்களிலே மிதிபடும் சருகென
போயினரே
தோளினில் சுமந்தவர்கள் தாலாட்டியே அன்பினில்
மிதந்தவர்கள்
தீயினில் எரிந்தாரே வெறும் தரையினில் குளிரினில்
முடிந்தாரே
திசையறியாமல் உறவறியாமல் தேன் மலர்க் கூட்டங்கள்
பாடிய பாட்டிது
(சோலையிலே பாடும்...)

தாங்கிக்கொண்டான் அவன் கைகளிலே வாங்கிக்
கொண்டான் அவன் தோளினிலே
தோன்றிய துணையவளே தாயன்புடன் தந்தையும்
எமக்கவனே

புகலிடம் கொடுத்தானே கல்வி பயிலவும் வளரவும்
விடுத்தானே
அண்ணனின் ஆசை அரவணைப்பினிலே தேன்மலர்க்
கூட்டங்கள் பாடிய பாட்டிது
(சோலையிலே பாடும்...)

பூக்களும் நாமே புலிகளும் நாமே புதுமைகள்
பொலிந்திட வளர்ந்தோமே
சமமெனும் நெறியினிலே சா வருகினும் அசையா
உறுதியிலே
அறிவெனும் சாலையிலே ஒளி விரிகின்ற சுதந்திர
காலையிலே
அணிநடையிடுவோம் மணியென ஒளிர்வோம் தேன்
மலர்க்கூட்டங்கள் பாடிய பாட்டிது
(சோலையிலே பாடும்...)

□ □ □

பாடலாசிரியர்: ஜெயா
பாடியவர் : செங்கதிர்

பல்லவி

தலைவரின் பாதையில் காலடி பதிப்போம்
தமிழீழம் நாமமைப்போம் – எம்
சந்ததிகாக்க நடந்திடும் சமரில்
நாமுமோர் பங்கெடுப்போம்
(தலைவரின் பாதையில்...)

சரணம்

தேசம் அழுகையில் சிந்திய குருதியில் தேசம் தெரி
கிறது
பாசம் அழிந்திடா எங்களின் வாழ்வினில் புதுப்பாதை
தெரிகிறது
தாய்மண் தவிக்கையில் நாமும் தவித்தோம் எம்
தவிப்பினை யாரறிவார்
அன்னையாய் தந்தையாய் எழுந்தனன் தலைவன்
அவனே துயர் தீர்த்தான்
(தலைவரின் பாதையில்...)

குந்தியிருந்திட குடிசையும் இல்லை கொளுத்தியே அதை
எரித்தார்
நாம் கொஞ்சி மகிழ்ந்திட்ட அன்னையைக்கூட கொடி
யவர் பறித்தொழித்தார்
வஞ்சினம் கொண்ட வெஞ்சமர் ஒன்றில் தந்தையை
நாம் தொலைத்தோம்
கெஞ்சியே வாழோம் அஞ்சியே மடியோம் வீரராய்
நாமெழுவோம்
(தலைவரின் பாதையில் ..)

பாடலாசிரியர்: நாவண்ணன்
பாடியவர் : மணிமொழி

**பல்லவி**

மலரத் துடிக்கும் மொட்டுக்கள் பறக்கத் துடிக்கும் சிட்டுக்கள்
தரையில் விழுந்த மொட்டுக்கள் வரும்காலம் படைக்கும் வித்துக்கள்
(மலரத் துடிக்கும் )

**சரணம்**

நேற்றுவரை பாலைவனம் இன்று சோலையாச்சு
ஏற்றிவைத்த தீபஒளி எங்கள் துணையாச்சு
நாளை எங்கள் சந்ததிக்கு நாங்கள்தானே தீபம்
வேளை வரும்போது நாட்டின் விழுதுகளாய் ஆவோம்
(மலரத் துடிக்கும்...)

பசித்தவர்க்கு உணவளிக்க உழைப்பவர்கள் நாமே
பகை ஒழிக்க ஆயுதங்கள் படைப்பவரும் நாமே
வைத்தியமும் பொறியியலும் வர்த்தகமும் செய்து
வளம் படைத்த ஈழமண்ணை வளர்ப்பவரும் நாமே
(மலரத் துடிக்கும்—)

பஞ்சம் என்று அடுத்தவன் கை பார்த்து நிற்க மாட்டோம் – நெஞ்சமதில்
ஈரமற்று நிலை தளம்ப மாட்டோம்
செஞ்சோலைப் பெருமரத்தின் சிட்டுக்கள் நாம்
ஈழத் திருநாட்டின் எதிர்காலச் சிற்பிகளாய் வாழ்வோம்
(மலரத் துடிக்கும்...)

பாடலாசிரியர்: யோகி
பாடியவர்கள் : காஞ்சனா (செஞ்சோலைப் பிள்ளைகள்)

பல்லவி

குழந்தைகள் நாங்கள் வாழ்ந்திடும் சோலை
நாட்டிற்கு வழிதனை காட்டிடும் சாலை
குறைவின்றி குழந்தைகள் வாழ்ந்திடும் நாளை – அதை
அடைந்திட உழைக்கும் எங்கள் செஞ்சோலை
(குழந்தைகள் நாங்கள்...)

சரணம்

உறவுகள் பிரிந்தே துணையின்றி வாழும்
குழந்தைகளே எம் சோலைக்கு வாருங்கள்
எங்கள் குடும்பம் பெரிததில் சேருங்கள்
எங்கும் இதுபோல் வாழ்வு இருந்தால் கூறுங்கள்
(குழந்தைகள் நாங்கள்...)

அம்மா தமிழோ மிகவும் இனியவள்
அண்ணா அக்கா மாபெரும் வீரர்கள்
தமிழரெல்லோரும் எங்கள் உறவினர்
நாங்கள் தமிழீழ நாட்டின் செல்லக் குழந்தைகள்
(குழந்தைகள் நாங்கள்...)

தாயகம் வீடுதலை பெற்றிட உழைப்போம்
தமிழவள் படுகின்ற துயரத்தைத் துடைப்போம்
ஆயிரம் ஆயிரம் கலைகளைக் கற்போம்
வரும் காலத்தில் உலகை நாங்கள் அமைப்போம்.
(குழந்தைகள் நாங்கள் ..)

## செஞ்சோலைப் பாடல்கள்

பாடலாசிரியர்: பொன். கணேசமூர்த்தி
பாடியவர்கள் : சிட்டு, தமிழ்ச்செல்வன், ஜெயவீரன்,
மணிமொழி, ஈழச்செல்வி, விதுசா.

**பல்லவி**

**வா**ழ்த்துங்கள் நெஞ்சங்களே – எமை
வாழ்த்துங்கள் நெஞ்சங்களே
வளமான எதிர்காலம் வரவேண்டுமென்று
வாழ்த்துங்கள் நெஞ்சங்களே

**சரணம்**

மலைமீதில் ஒளியாக தமிழீழ விழியாக
புகழோடு பெருவாழ்வு பெறவேண்டும் என்று
செஞ்சோலைப் பறவைகள் நாம்
வளமான எதிர்காலம் வரவேண்டுமென்று
வாழ்த்துங்கள் நெஞ்சங்களே

கலையாத ஞானமும் கண்ணான மானமும்
நிலையாகக் கொண்டு குலையாமல் வாழவே
நிமிர்கின்ற மலையாய் சொரிகின்ற மழையாய்
செஞ்சோலைப் பறவைகள் நாம்
வளமான எதிர்காலம் வரவேண்டுமென்று
வாழ்த்துங்கள் நெஞ்சங்களே

உறுதியும் கருணையும் உள்ளத்தில் கொண்டு
நிலையாக நின்று குலையாமல் வாழவே
விடுதலை ஒளியிலே விண்ணில் பறப்போம்
செஞ்சோலைப் பறவைகள் நாம்
வளமான எதிர்காலம் வரவேண்டுமென்று
வாழ்த்துங்கள் நெஞ்சங்களே

## கூவுகுயிலே பாடல்கள்

பாடலாசிரியர்: சி. கபிலன்
பாடியவர் : சி. கபிலன்

**பல்லவி**

வீரத்தின் விளைநிலங்களே
ஈழத்தின் ஒளிர்வதனங்களே
வானத்தில் மிளிரும் விண்மீன்களே
இவர்கள் எங்கள் மாவீரரே
(வீரத்தின் விளைநிலங்களே...)

**சரணம்**

எரீயும் இனியும் எரியும் – உங்கள்
கண்கள் நெருப்பு பகையை எரிக்கும்
மலரும் ஈழம் மலரும் – உங்கள்
வாழ்வில் இலட்சிய ஈழம் மலரும்
பாசத்தை மறந்து பந்தத்தை துறந்து
மண்ணில் புதைந்த மாவீரரே
தேகத்தை மறந்து தேசத்தை நினைந்து
எங்களில் வாழும் செல்வங்களே
காலம் மாறும் வேங்கை வெல்லும்
உங்கள் கனவு இனிதே நிறையும்
(வீரத்தின் விளைநிலங்களே...)

சத்தம் வேட்டுச் சத்தம் – இங்கு
எதிரியின் கதையை விரைவில் முடிக்கும்
சீற்றம் புலியின் சீற்றம் – எங்கும்
பகைவனின் தலையை பணிய வைக்கும்
தலையே இங்கு சரிந்தாலும் – எமது
தமிழீழக் கொள்கை மறப்போமா
மலைபோல் எதிரி திரண்டு வந்தாலும்
மாவீரர் கனவை மறப்போமா
எங்கள் தலைவன் வழியில் நாங்கள்
உங்கள் கல்லறையை உயிர்த்தெழச் செய்வோம்
(வீரத்தின் விளைநிலங்களே...)

பாடலாசிரியர்: ரமணன்
பாடியவர் : சத்தியசீலன்

பல்லவி

ஈழம் எங்கள் தாயகம் என்றும் வாழும் ஆலயம்
வாழும் காலம் யாவும் எங்கள் உயிரைத்தந்தும் காத்
திடுவோம்
(ஈழம் எங்கள்...)

சரணம்

வீரர்கள் என்றும் சாவதில்லை சாவுக்குப் பயந்தவர்
வீரரில்லை
தோல்வியைக்கண்டு துவள்வதுமில்லை
வெற்றியின் படியில் ஏறுகின்றோம்
எங்களின் தியாக வித்துக்கள் நிச்சயம் ஒருநாள்
பயிராகும்
எங்களின் கனவுகள் நனவாகும்
ஈழத்தில் எங்கள் கொடிபறக்கும்
(ஈழம் எங்கள்...)

தடைகள் கோடி என்றாலும் படைகள் தேடிவந்தாலும்
விடைகள் எங்கள் தோள்களில் உண்டு
விடியும் ஒருநாள் வாருங்கள்
நாளை மலரும் ஈழத்திலே சுதந்திர மலர்கள்
மொட்டவிழும்
இன்றைய எங்கள் போராட்டம் முடிவாய் இதற்கொரு
பதில் சொல்லும்
(ஈழம் எங்கள்...)

பாடலாசிரியர்: தமிழேந்தி
பாடியவர் : திவாகர்

பல்லவி

கருப்பையில் வளர்ந்து வரும் குழந்தைகளே – நீங்கள்
கரும்புலிகளாகி இங்கு வாருங்களே
தெருத்தெருவாய் அலையும் தமிழர்களைக் காக்கும்
திருத்தொண்டு புரிந்திட வாருங்களே
(கருப்பையில் வளர்ந்துவரும்...)

சரணம்

மண்ணுக்காய் மரணித்த மறவர்களே – மீண்டும்
மானிடராகி இங்கு வாருங்களே
கண்ணான தமிழ் காக்க வாருங்களே – உங்கள்
எண்ணங்கள் நிறைவேற்ற வாருங்களே
(கருப்பையில் வளர்ந்துவரும்...)

திருவிலில் சங்கமித்த தீரர்களே – உங்கள்
திருமலை எரிமலை ஆகியதே
பொறிந்திடப் புயலாகி வாருங்களே – அதன்
பெருமையை தமதாக்க வாருங்களே
(கருப்பையில் வளர்ந்துவரும்...)

சரித்திரங்கள் பல சமைத்துத் தந்தீரோ – சமர்
புரிவதிலே சமர்த்தர் என நின்றீரே
வரித்த குறி வாழ்வதென கொண்டீரே – பகை
எரித்துக் கரி உள்ளத்தில் நின்றீரே
(கருப்பையில் வளர்ந்துவரும்...)

## கூவுகுயிலே பாடல்கள்

பாடலாசிரியர்: ரமணன்
பாடியவர் : ரமணன், கௌசி

**பல்லவி**

தமிழ் அன்னை துயர் நீக்க நாம் பிறந்தோம்
தன்மானப் புலிகள் என தலை நிமிர்வோம்
அடிமை விலங்கொடிக்க எழுந்திடுவோம்
அண்ணனின் படையினிலே அணிதிரள்வோம்
(தமிழ் அன்னை—)

**சரணம்**

புலியே உனக்கென்ன உயிர்பெரிதோ – கொஞ்சம்
சயனைட்டின் விசம் பெரிதோ
விசம் கூட உன் நாவிற்கு அமிர்தம் அன்றோ
சாவே உன் வாழ்வின் உதயம் என்றோ
(தமிழ் அன்னை...)

இன்னமும் நாமென்ன அடிமைகளோ – தமிழ்
ஈழத்தில் கொலைகள் என்ன தொடர் கதையோ
அத்தனை கொடுமைகட்கும் முடிவுரையை
தம்பியின் தலைமையிலே எழுதிவைப்போம்
(தமிழ் அன்னை...)

சிதையிலே எரிந்திடும் போதினிலே – விடுதலை
விதையென முளைவிடும் வீரர்களே
பாதையில் புலியென எழுந்திடுவோம்
பைந்தமிழ் ஈழத்தின் விலங்கொடிப்போம்
(தமிழ் அன்னை...)

பாடலாசிரியர்: சி. கபிலன்
பாடியவர் : சி. கபிலன்

பல்லவி

மறவர் நாங்கள் – வீர மறவர் நாங்கள்
தமிழீழ விடுதலைக்காய் சுடர்விடுகின்ற
புலிகள் நாங்கள்
தலைவர் வழியிலே வீரநடைபோடுவோம்
தரணி முழுவதும் தமிழிசை பாடுவோம்
எங்களின் வீரர் சாய்வதில்லை
சாய்ந்தாலும் கரங்கள் ஓய்வதில்லை
பொங்கும் தமிழீழம் தூரமில்லை
அன்னையின் துயரம் மறப்பதில்லை
(மறவர் நாங்கள்...)

சரணம்

பண்டைய நாட்டுப் பாரதிகூட
பாடிப்புகழ்ந்திட்ட தமிழீழம்
அண்டைய நாடு அதிசயிக்கும் வண்ணம்
அற்புதம் காணும் தமிழீழம்
வீரப்புதல்வர்கள் வீரம் சொரிகின்ற
வித்தகம் காணும் தமிழீழம்
சாதி மதம் என்ற பேதம் ஒழிந்திட்ட
சமதர்மம் காணும் தமிழீழம்
(மறவர் நாங்கள்...)

களத்தினிலே கவிகள் பாடும்
காவியம் போற்றும் புலிகள் நாம்
தமிழ் மனங்களிலே நிலைத்து வாழ்ந்து
மாவீரர் ஆகும் புலிகள் நாம்
மண்ணிற்காய் நாங்கள் மண்ணை முத்தமிட்டு
சங்கமமாகும் புலிகள் நாம்
நாளை ஈழமக்கள் நிம்மதியாய் வாழ
போராடக் குதிக்கும் புலிகள் நாம்
(மறவர் நாங்கள்...)

பாடலாசிரியர்: சி. கபிலன்
பாடியவர் : சி. கபிலன்

**பல்லவி**

புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்
என்றே சங்கே நீ முழங்கு
பகைதனை தொலைத்து தமிழதை நினைத்து
தாயகம் மீட்போம் என்று நீ முழங்கு
(புலிகளின் தாகம்...)

**சரணம்**

புலிகளின் வீரம் தன்னை உலகெங்கும் உரைத்து வா
போர்க்களம் ஆடும் மாந்தர் வீரத்தை உணர்த்தி வா
தலைவனின் பேரைச்சொல்லி தரணியெங்கும் இயம்பிவா
மாண்ட நம் வீர மைந்தர் கானத்தைப் பாடி வா
(புலிகளின் தாகம்...)

கடற்புலிகள் கடலில் பாடும் கவிதைகளைப் பாடி வா
கரும்புலிகள் தம்மை அழிக்கும் வீரத்தை உணர்த்தி வா
பெண் புலிகள் ஆயுதம் ஏந்தும் தர்மத்தை உணர்த்தி வா
ஈழமும் இன்றே மலரும் என்று எதிரொலித்து வா
(புலிகளின் தாகம்...)

பாடலாசிரியர்: தமிழவள்
பாடியவர் : மேரின்

பல்லவி

படையணி நகரும் எங்கள் படையணி நகரும்
அலைகடல் என எதிரி வரினும்
பல்லாயிரம் பகைவர் எனினும்
வீறுகொண்டு எழுந்த பெண்கள் படையணி நகரும்
(படையணி நகரும்...)

சரணம்

வெறிகொள் எதிரி உடல்கள் சிதற
சிங்களப் பேய் ஆதிக்கம் கரைய
வீழ்ந்த வீரர் வேட்கை சுமந்து
விடுதலைத்தீ கனலை எடுத்து
(படையணி நகரும்...)

ஆறாத்துயர்கள் அடுத்து வரினும்
ஆறாய் எங்கள் குருதி ஓடினும்
ஆயிரம் உடல்கள் தீயினில் பாயினும்
அடக்க வந்தவர் ஆதிக்கம் அழிய
(படையணி நகரும்...)

பாவலர் போற்றிய பைந்தமிழ் காக்க
பாரினும் சிறந்த செம்மொழி வாழ
சீருடன் எம்மினம் சிரித்து மகிழ
சிட்டுக்கள் சிறகை விரித்துப் பறக்க
(படையணி நகரும்...)

பாடலாசிரியர்: சபரி
பாடியவர் : ரமணன்

**பல்லவி**

கடலினில் எதிரியைக் கலக்கி அடிக்கவே
படகினில் நாங்கள் விரைந்து செல்கின்றோம்
உடலினில் உறுதி உள்ள வரையினும்
தடையெதும் எதிரில் வருவதில்லையே
(கடலினில் எதிரியைக்...)

**சரணம்**

கடலினில் கலந்த கடற்புலி வீரர்கள்
கடலலையாகி எம்மையும் தாங்குவர்
காற்றினில் கலந்த கரும்புலி வீரர்கள்
காவியமாகி வழியினைக் காட்டுவர்
(கடலினில் எதிரியைக்...)

நாளும் பொழுதும் பட்ட துயரங்கள்
நாளை விடியலில் பொசுங்கிப் போகுமே
நீரும் கடலும் நிலமும் வானமும்
பாடும் காலம் தூரமில்லையே
(கடலினில் எதிரியைக்...)

எங்கள் கடலிலே எங்கள் படகிலே
கடற்புலி வீரர் நாம் சாதனை புரிந்திட
சிங்களம் கலங்கிட சிதறியே ஓடிட
தங்கத் தமிழீழ நாடது பிறந்திடும்
(கடலினில் எதிரியைக்...)

## கூவுகுயிலே பாடல்கள்

பாடலாசிரியர்: காயத்திரி
பாடியவர் : மேளின்

**பல்லவி**

துயரப் புதர் முட்கள் கீறி கிழித்திட
துடித்தவர் இங்கே எழுந்துவிட்டார்
உரிமைகள் கேட்டிட உரிமையும் உண்டு – என்ற
உண்மைகள் அனைத்தையும் உணர்ந்து விட்டார்
(துயரப் புதர்...)

**சரணம்**

உயிரையும் கொடுத்திடத் துணிந்து விட்டார்
உண்மை வாழ்வினை உணர்ந்திட விரைகின்றார்
எதிரிகள் எவரென அறிந்து கொண்டார்
அவரை அழித்திட உழைக்கவே உறுதிகொண்டார்
(துயரப் புதர்...)

புறம்காட்டி எதிரி ஓடுகின்றான்
புயல் வீரம் கண்டு தடுமாறுகின்றான்
மறக்குலத்து மங்கையர் தானிவர் என்று
மறக்காத பாடம் படிக்கின்றான்
(துயரப் புதர்...)

ஆயுதம் எதிரியை வீழ்த்திவிடும் – பெண்கள்
ஆற்றல்கள் பகைமையைச் சாய்த்து விடும்
வீசிடும் பொருட்கள் பெண்களல்ல – என்று
விளக்கிடும் காலமும் வந்துவிடும்
(துயரப் புதர்...)

பாடலாசிரியர்: சி. கபிலன்
பாடியவர் : சி. கபிலன்

**பல்லவி**

**தா**யே நீயும் ஒரு மகனை
போர்க்களம் நோக்கி அனுப்பு
சுதந்திரம் காண விடுதலை வேண்ட
இன்றே உன் மகனை புலியாக்கு
பகையைத் தொலைப்போம் – அடிமை
விலங்கை உடைப்போம்
உன் மகனை நீயே வாழ்த்தி விடைகொடு
(தாயே நீயும்...)

**சரணம்**

ஆடவர் மகளிர் என்ற பேதமற்ற யுத்தமம்மா – தினம்
ஈழமண்ணிலே சிந்துது எங்கள் ரத்தமம்மா
குண்டுபட்டபின் எங்கள் உடல் வீர மண்ணில் முத்த
மம்மா –
உறக்கம் போதும் இன்றே நீ எரிமலையாயே எழுந்தி
டம்மா
(தாயே நீயும்...)

தர்மமா இல்லை அதர்மமா என்ற கேள்வியம்மா
தமிழர்கைகளில் ஏந்தும் துப்பாக்கி விடை சொல்லுமம்மா
வீரமரணத்தை நான் அடைந்த களம் வாருமம்மா
வீர சபதம் கொண்டுநீ எதிரி படைகளை விரட்டிடம்மா
(தாயே நீயும்...)

## விழித்தெழுவோம் பாடல்கள்

பாடலாசிரியர்: மேஜர் பாரதி
பாடியவர் : புவனா இரத்தினசிங்கம்

**பல்லவி**

வசந்தமொன்று வருகிறது வாழ்த்துப்பாடுவோம்
– பெண்ணின்
மாற்றம் வரும் காலம் தன்னை ஏற்றுப் போற்றுவோம்
கலைந்து போகும் கனவுகளா எங்கள் தமிழீழம்
– இல்லை
காலம்காலமாக நாங்கள் ஆண்டிருந்த தேசம்

**சரணம்**

மண்ணினை மீட்டிடும் எண்ணங்கள் கொண்டோம்
மரபு வழியினில் சமர் செய்தோம் – எங்கள்
கண்களில் தீச்சுடர் ஏந்திச் சுமந்தோம் – அண்ணன்
காட்டும் வழியினில் நாங்கள் நடந்தோம்
(வசந்தமொன்று வருகிறது...)

நாட்டு வளங்கள் நாங்கள் படைத்தோம்
நவமான புதுமைகள் நாங்கள் செய்தோம் – அந்த
விண்ணையும் கைகளால் தொட்டே மகிழ்ந்தோம் –தமிழ்
வீரப்புலிகள் என ஏறி நடந்தோம்
(வசந்தமொன்று வருகிறது...)

புதுவழி காட்டியே எம்மை வளர்த்திடும்
புதுமைத் தலைவனும் எமக்குண்டு – ஓடி
எதுவரும் போதிலும் அவன்வழி செல்வோம் – நாளை
இங்கொரு நாடு நாங்கள் சமைப்போம்
(வசந்தமொன்று வருகிறது...)

## விழித்தெழுவோம் பாடல்கள்

பாடலாசிரியர்: தமிழவள்
பாடியவர் : சாந்தன்

**பல்லவி**

களம் காண விரைகின்ற வேங்கைகள் நாங்கள்
தமிழீழம் உருவாகும் பாருங்கள் – இங்கு
புதுப்பாதை தனை எங்கள் தலைவனே தந்தான்
புலியாகி எழுவோமே வாருங்கள்

**அனுபல்லவி**

இன்னுமா விழிகளில் ஈரம் – இது
எழுந்து போராடிடும் நேரம்
(களம் காண...)

**சரணம்**

தேசங்கள் எங்கும் விடுதலை தேடி
போராடும் நேரமிது – நம்
தாகங்கள் தீரும் தாயகம் சேரும்
தலைவனின் காலமிது
(இன்னுமா விழிகளில்...)
(களம் காண...)

வாழ்வினில் சா வரும் என்றுமே அஞ்சி
வழியினில் நாங்கள் தளர்வோமா – தமிழ்
தாயினை மாற்றான் அழித்திடும் வேளையில்
தமிழர் நாம் சும்மா இருப்போமா
(இன்னுமா விழிகளில்....)
(களம் காண...)

தலைவன் வழியிலே தடைகளை வென்றுமே
சரித்திரம் படைத்திங்கு நிற்போம் – இந்த
உலகினில் வாழும் பெண்களுக்கெல்லாம்
புதுவழி காட்டியே நிற்போம்
(இன்னுமா விழிகளில்...)
(களம் காண...)

பாடலாசிரியர்: வசந்தமதி
பாடியவர் : மணிமொழி

**பல்லவி**

மாசற்ற நெஞ்சத்தை கொண்டவன் – தமிழ்
மானத்தை உயிராய் கண்டவன்
வீசிடும் புயலாய் ஆடுவான் – பகை
வீழ்த்தியே பாடல் பாடுவான்
(மாசற்ற நெஞ்சத்தை...)

**சரணம்**

ஈனவெறியாளன் செயல்கண்டு உதிரம் உறைந்ததுவே
– அந்த
கோர கொலை வேடன் செயல்கண்டு தோள்கள்
துடித்தனவே
ஈழம் கடும் துயர் காணும் பொழுதினில் நாளம்
அதிர்ந்ததுவே – எங்கள்
வீரப் புலிபிர பாகரன் பாதையில் வேங்கைகள் எழுந்
தனரே
(மாசற்ற நெஞ்சத்தை...)

காலன் வரும்போதும் புலிவீரர் தேகம் களைத்திடுமோ
– கொடும்
காலன் உடல்வீழ தினம் மோதும் தேசம் விழித்திடுமோ
பாலனுடன் தமிழ்மாது இணைந்து பாடம் புகட்டிடுமே–கரி
காலன் வழிவந்த சேனை துடித்தெழின் தேசம்
நிலைத்திடுமே
(மாசற்ற நெஞ்சத்தை...)

வீரம் தனைப்பாலாய் தினம் ஊட்டும் தாயும்
அவனல்லவா – நல்ல
பண்பை தாலாட்டாய் தினம் பாடும் தந்தை அவனல்லவா
காலந் தனைப் பெரும் வேதம் எனத்தரும் ஆசான்
அவனல்லவா – பெரும்
அன்புதனை இங்கே அள்ளிச் சொரிந்திடும் அண்ணன்
அவனல்லவா
(மாசற்ற நெஞ்சத்தை...)

□ □ □

## விழித்தெழுவோம் பாடல்கள்

பாடலாசிரியர்: கீர்த்தனா
பாடியவர் ; விதுஷா

**பல்லவி**

எத்தனை எத்தனை யுகங்கள் – இன்னும்
எத்தனை காலம் அடிமையின் சுகங்கள்
புதுமைப் பெண்களாய் விலங்குகள் உடைப்போம்
புதுயுகம் எங்களின் தேசத்தைப் படைப்போம்
(எத்தனை எத்தனை...)

**சரணம்**

காலம் காலமாய் அடங்கிக் கிடந்தோம்
களைந்தே அடிமை நிலையினை எறிவோம்
விலங்கினை உடைப்போம் வீறுகொண்டெழுவோம்
விடுதலைப் புலியாய் சரித்திரம் படைப்போம்
(எத்தனை எத்தனை...)

அடுப்பங்கரையினில் அடிமையாய் இருந்தோம்
அடங்கிப் பணிவதே அழகென்றிருந்தோம்
இனியும் இந்நிலை இல்லாதொழிப்போம்
விடிவினைக் காண அணியாய் நடப்போம்
(எத்தனை எத்தனை...)

பெண்கள் படையணி போர்க்களம் போகும்
எதிரி சிதறியே ஓடிட ஆடும்
பெண்மையும் வீரம் என்றினிச் சொல்லும்
செந்தமிழ் ஈழம் எமதென வெல்லும்
(எத்தனை எத்தனை—)

பாடலாசிரியர்: உதயலட்சுமி
பாடியவர் : சுகந்தி

பல்லவி

கல்லறை எனக்காய் காத்திருக்கும்– அதில்
காணிக்கையாகவே மலர்களும் பூக்கும்
சிதையும் எனக்காய் கதியிருக்கும் – வேகும்
விறகுகள் கூடவே விழித்திருக்கும்
(கல்லறை எனக்காய் ...)

சரணம்

வெல்லும் சமரொன்று நடக்கையிலே – ஒரு
ஷெல்லும் எனக்காய் கூவிவரும்
வேகிப் பகைமுகாம் எரிகையிலே – அவன்
ஏவும் வேட்டொன்று தேடிவரும்
(கல்லறை எனக்காய்...)

சேர்ந்து புலியாய் மாறிய முதலே
சுமந்த நஞ்சும் காத்திருக்கும்
பருந்தும் நாயும் என்னுடல் சுவைக்க – நான்
போரிடும் களத்தில் பார்த்திருக்கும்
(கல்லறை எனக்காய்...)

எத்தனை கோணத்தில் மரணம் எனக்காய்
மாறி மாறியே பார்த்திருக்கும்
இத்தனையும் ஏற்பேன் எம்மண்ணிற்காக – என்
தேசம் எனக்காய்த் திரண்டெழட்டும்
(கல்லறை எனக்காய்...)

## விழித்தெழுவோம் பாடல்கள்

பாடலாசிரியர்: காயத்திரி
பாடியவர் : அபிராமி

### பல்லவி

உயிர்ப்புடன் எழுந்தோம் உணர்வுடன் விழித்தோம்
உலகில் புதிய சரித்திரம் படைத்தோம்
பெண்ணடிமை தத்துவம் உடைத்தோம்
(உயிர்ப்புடன் எழுந்தோம்...)

### சரணம்

அடுப்புக்குள் அடங்கியே புகைந்தவர் – உண்மை
முன்னர் அழுதிடக்கூடவே பயந்தவர் – இன்று
நெருப்பென நிமிர்ந்திடத் துணிந்திட்டோம் – பகை
நீறெனப் போய்விட எழுந்திட்டோம்
(உயிர்ப்புடன் எழுந்தோம்...)

ஊமையாய் உள்ளத்தில் தூங்கினோம் – உண்மை
வாழ்வுக்காய் நாளும் தான் ஏங்கினோம் – ஆண்
தேவைக்குப் பயன்பட்டுப் பலியானோம் – இன்று
ஆயுதம் ஏந்திட்ட புலியானோம்
(உயிர்ப்புடன் எழுந்தோம்...)

வீட்டிற்குள் மட்டுமே வாழ்ந்திடும் – விதி
மாற்றிட எழுந்தவர் நாங்களே – எம்
நாட்டினை மீட்டிடும் போருடன் – பெரும்
உணர்வுடன் இணைந்தவர் நாங்களே
(உயிர்ப்புடன் எழுந்தோம்...)

வீறுடன் வேங்கையாய் தாவுவோம் – இனி
விடுதலைத் தீயினுள் ஆடுவோம்– தமிழ்
தேசத்தை மீட்டிட ஓடுவோம் – உயிர்
போகிலும் உயிர்ப்புடன் பாடுவோம்
(உயிர்ப்புடன் எழுந்தோம்...)

பாடலாசிரியர்: ஜெயா
பாடியவர்கள்: ராதிகா, அபிராமி, வர்ண ராமேஸ்வரன.

பல்லவி

புறம் ஒன்றுதினம் பாடும் பெண்புலிகள் கூட்டம்
புதிய வரலாறெழுதி புகழாரம் சூடும்
அடலேறு துணிவுடனே அகிலத்தை ஆளும்
புகழேறு பெருந்தலைவன் படையினிலே சேரும்
(புறம் ஒன்று...)

சரணம்

புதிய சமுதாயம் எழுதும் கவியாக புலியாகி
களமாடி நின்றார்
பழைய பஞ்சாங்கம் யாவும் தகர்த்து கழுத்திலே
நஞ்சோடு வென்றார்
சொந்தம்தனைத் தொலைத்த பிஞ்சுக் குழந்தைகளின்
சொந்தம் இவராகி நின்றார்
வஞ்சம் நிறைந்தவரின் வலைதன்னில் வீழ்ந்தோரின்
தஞ்சம் இவராகி வென்றார்
(புறம் ஒன்று...)

வீரம் விளைகின்ற நெஞ்சினர் தேசத்தில் விடிந்திடப்
பாடிடும் குயில்கள்
தீரம் எழுகின்ற உளத்தோடு தமிழனின் மானம்
சுமந்திட்ட புலிகள்
அணுவைப் பிளந்தேனும் கடலைத் துளைத்தேனும்
விடியலைக் காணிடும் வேங்கை
அண்ணன் வழிமீது அணியாய் நடக்கின்ற வீரம்
நிறைந்திட்ட தங்கை
(புறம் ஒன்று ...)

## விழித்தெழுவோம் பாடல்கள்

பாடலாசிரியர்: ஜெயா
பாடியவர் : சிட்டு

**பல்லவி**

அலைபாடும் இசையோசை கேட்கலையா - கரையில்
இளம் வீரர் படும் பாதம் பார்க்கலையா
துணைநிற்க ஒரு கருவி தூக்கலையா - இன்னும்
அவர் நெஞ்சின் உணர்வலைகள் தாக்கலையா
(அலைபாடும் இசையோசை...)

**சரணம்**

விழிதூங்க மறந்திங்கு விசைப்படகைப் பார்த்திருந்து
பகைமுடித்த எம்தோழர் சேதியினைத் தாங்கி வரும்
வழியிதுவென்றே உரைத்த வரலாற்று நாயகரின்
வாழ்வதுவின் பாதைதனை அலையெழுந்து காட்டிநிற்கும்
(அலைபாடும் இசையோசை )

ஓடிக்களித்த பெரும் நீளக்கடல் வெளியை
மீளத்தொடாத எங்கள் தோழர்களின் கதை கூறும்
கூடிக்களித்த புலி வீரர்களின் நினைவலைகள்
கூடச்சுமந்து ஒரு சோகஇசை அலைபாடும்
(அலைபாடும் இசையோசை...)

மச்சத்தைத் தேடி வலை வீசவெனச் சென்றவர்கள்
மிச்சமெதும் இல்லாத வேதனைகள் தாங்கிவரும்
அச்சத்தால் கடலோடி அந்தரிப்போர் துயரமதை
அகற்றவெனச் சென்றவரின் சோகங்கள் பாடிவரும்
(அலைபாடும் இசையோசை ..)

ஆயிரமாய் அலையெழுந்து ஆர்ப்பரித்து நிதமொலிக்கும்
பாயிரமாய் புலிவீரம் பாடியிங்கு கடலடிக்கும்
விடியலைத் தேடுகின்ற சேதியினைக் கொண்டுவரும்
மடிமீது உறங்குகின்ற தோழர்களின் கனவுரைக்கும்
(அலைபாடும் இசையோசை...)

## விழித்தெழுவோம் பாடல்கள்

பாடலாசிரியர்: தமிழவள்
பாடியவர்கள்: சாந்தன், புவனா இரத்தினசிங்கம்.

பல்லவி

கல்லறையில் விளக்கேற்றிப் பணிகின்றோம் – உங்கள்
கனவுதனை எமதாக்கித் தொடர்கின்றோம்

சரணம்

மண்மீது பற்றுக்கொண்டீர் மறைவிடம் சேர்ந்தீர்
மறவர்கள் ஆகமீண்டு பாசறை எரித்தீர்
எரித்திடும் வேளைதனில் விதையாய் விழுந்தீர்
மறந்திடுமோ உம் நினைவு அழிந்திடுமோ உம் கனவு
விரைந்திடுவோம் எதிரியவன் உயிரதுக்கு விடை
கொடுப்போம்
(கல்லறையில் விளக்கேற்றிப்...)

தன்மானம் காக்கவென்று தாயினைப் பிரிந்தீர்
தாய்நாட்டை மீட்கவென்று உறவினை மறந்தீர்
விழுகின்றபோதும் எம்விடிவினை நினைத்தீர்
எரிமலையாய் நாம் எழுவோம் விடுதலைக்காய் தலை
தருவோம்
விலங்கறுப்போம் சிறையுடைப்போம் விடுதலைப்பண்
பாடிடுவோம்
(கல்லறையில் விளக்கேற்றிப்...)

பூவாக வாழ்ந்திங்கு புயலாய் எழுந்தீர்
புதுவரலாறெழுதி களம்தனைச் சேர்ந்தீர்
பூகம்பப் பொறியாய் எம் மனங்களில் பதிந்தீர்
கடமைதனை நாம் மறவோம் பயிற்சியினை நாம்
பெறுவோம்
தாயகத்தை மீட்டு எங்கள் தலைவன் புகழ் பாடி
நிற்போம்
(கல்லறையில் விளக்கேற்றிப்...)

பாடலாசிரியர்: ஜெயகௌரி
பாடியவர் : ச. மேளின் வேஜினி

பல்லவி

விடுதலை வானத்தில் சிறகினை விரிப்போம்
வாருங்கள் தோழர்களே!
வெளியினில் பறப்போம் ஒளியினில் குளிப்போம்
வாருங்கள் தோழியரே!
(விடுதலை வானத்தில்...)

சரணம்

இருட்டினில் இதுவரை இருந்து படித்தோம்
இதயத்தின் கனலில் எரிந்து வெடித்தோம்
அடிபட அடிபட குனிந்து கொடுத்தோம்
வெடிபட புழுதியில் வாழ்வை முடித்தோம்
தெறித்திடும் தெறித்திடும் அடிமையின் சங்கிலி
வரிப்புலி வருகுது விடுதலை குறுகுது
(விடுதலை வானத்தில்...)

புலம்பி நிற்கவா பாடங்கள் படித்தோம்
எழுதி அழிக்கவா பட்டங்கள் எடுத்தோம்
தொழுது பிழைக்கவா தேகத்தை வளர்த்தோம்
அழுது கலங்கவா ஆசையை வளர்த்தோம்
தெறித்திடும் தெறித்திடும் அடிமையின் சங்கிலி
வரிப்புலி வருகுது விடுதலை குறுகுது
(விடுதலை வானத்தில்...)

பாடலாசிரியர்: பிரதீபா
பாடியவர் : சந்துரு

பல்லவி

தமிழ் மானம் என்பது பேச்சினில் இல்லை
மூச்சினிலே வர வேண்டும்
செயல் வீச்சினிலே வர வேண்டும்
தமிழ் ஈழம் என்பது ஏட்டினில் இல்லை
எழுச்சியிலே வரவேண்டும்
மக்கள் புரட்சியிலே வரவேண்டும்
(தமிழ் மானம்...)

சரணம்

எத்தனை பட்டங்கள் எங்கு பெற்றாலும்
எத்தனை விருதுகள் எங்கு வந்தாலும்
அடிமையை உலகம் மதிப்பதுமில்லை
குடிமையின் வாசல் விடிவதுமில்லை
(தமிழ் மானம்...)

தாயகம் ஒளிபெற அறிவினைத் தருவோம்
தீயினில் எரியும் தேசத்தைப் பெறுவோம்
விடியலின் காலையில் விரைந்திங்கு நடப்போம்
வேண்டிய பொழுதினில் உயிரையும் கொடுப்போம்
(தமிழ் மானம்...)

பாடலாசிரியர் : வாசுகி
பாடியவர் : ச. மேளின் வேஜினி

**பல்லவி**

தவித்த தமிழினம் விழித்து எழுந்தது
தலைகள் நிமிர்ந்திட முரசம் அதிர்ந்தது
தமிழர் படையணி எழுந்துகொண்டது
பகையை ஒழித்திட சபதம் எடுத்தது
(தவித்த தமிழினம்...)

**சரணம்**

தங்கையின் கரம் பகைவன் இழுப்பதா
கட்டிய மனைவிதன் மானம் இழப்பதா
எங்கள் மண்ணினை எதிரி ஆள்வதா
எதிர்த்திடாது நாம் பார்த்து இருப்பதா
(தவித்த தமிழினம்...)

இளைய தலைமுறை இனியும் பொறுப்பமா
ஈழத்தாயினை தெருவில் விடுவதா
எழுக கரங்களே இன்னும் தயக்கமா
எங்கள் கடமையை நாங்கள் மறப்பதா
(தவித்த தமிழினம் )

மலையை ஒத்ததோர் வலிமை கொண்டவா
மார்பு தட்டிடும் வீரம் பெற்றவா
சேர சோழனின் வழியில் வந்தவா
சேனை கொண்டு நாம் பகையை வெல்லவா
(தவித்த தமிழினம்...)

# விடியலைத்தேடும் பறவைகள் பாடல்கள்

பாடலாசிரியர்: தர்ஷி
பாடியவர் : றெனால்ட்

**பல்லவி**

இது ஒரு புதுவித அதிசயம்
இன்னும் உலகம் விளங்காத ரகசியம்
இருளில் இருக்கின்ற தமிழினம்
நாளை விடிவினில் வாழ்ந்திட வழிவரும்
(இது ஒரு ...)

**சரணம்**

சீருடை ஊணிடம் தமிழருக்கில்லை
போரினில் சிவக்குது ஈழத்தின் எல்லை
கூறிட இடமில்லை கேட்பவர் இல்லை
குமிறினும் கண்களில் நீர்வரவில்லை
வயிற்றினில் எப்போதும் பசிக்கோலம் - சா
கயிற்றில் தூங்குதெங்கள் எதிர்காலம்
(இது ஒரு...)

கண்ணையும் கட்டியே நடக்கச் சொல்கின்றார்
கல்விதனையும் இங்கே நசுக்கிக் கொல்கின்றார்
சோதனை நாளிலும் 'செல்'லை அடிக்கின்றார்
சாதனை இதுவென புலம்பிக் கொள்கின்றார்
போலிப் போதிகளின் குணக்கோலம் - இது
பூமி அறியாத வினைக்கோலம்
(இது ஒரு...)

தலைவனின் அணியிலே தாவியே பாய்வோம்
தலைநிமிர்ந்து நாங்கள் தமிழீழம் அமைப்போம்
காவிய நாயகன் வழியினைத் தொடர்வோம்
கல்லறைச் சுவடினில் காலடி பதிப்போம்
கண்களில் தெரிகின்ற எதிர்காலம் – அதை
காண துடிக்குதெங்கள் நிகழ்காலம்
(இது ஒரு...)

## விடியலைத்தேடும் பறவைகள் பாடல்கள்

பாடலாசிரியர்: சலோமை
பாடியவர் : விஜயலட்சுமி

### பல்லவி

தன் உடலை மண்காக்க தந்த தமிழனே
தன்னுயிரை மொழிக்காக ஈந்த மறவனே
பூமியிலே நீ வீழ்ந்தாய் மாவீரனே - விழுந்த
புழுதிகூட உன்னுடைய பரணி பாடுதே
(தன்னுடலை மண்காக்க...)

### சரணம்

நெஞ்சினிலே நீ அணைத்துநின்ற ஆயுதம்
வெஞ்சமரில் வெடி முழங்கி உன்னைக் கூவுதே
பஞ்சவரின் பாரதப்போர் கண்டிருக்குமோ - நீ
படைமுகத்தில் செய்த வீரம் கொண்டிருக்குமா
(தன்னுடலை மண்காக்க...)

குலம் தழைக்க குருதிமழை மண்ணில் பெய்தனை
நலந்துறந்து உனது வாழ்வை தியாகம் செய்தனை
இளமை தேடும் இனிமையாவும் ஏற்க மறந்தனை - நீ
இறந்து பிறர் வாழ என்று உயிர் துறந்தனை
(தன்னுடலை மண்காக்க...)

கண்ணிரண்டும் கலங்குதடா உன்னை எண்ணிட
காலிரண்டும் துடிக்குதடா உன்னைத் தொடர்ந்திட
சன்னம் ஏற்று சாவணைத்த மாவீரனே - நீ
சொரிந்த ரத்தம் ஈழமண்ணில் வீரயமாகுமா
(தன்னுடலை மண்காக்க...)

## விடியலைத்தேடும் பறவைகள் பாடல்கள்

பாடலாசிரியர்: கொலின்ஸ்
பாடியவர் : கொலின்ஸ்

**பல்லவி**

களத்தில் நிற்கும் வேங்கைகளே
உங்கள் பாடல் காதில் கேட்கிறதே
நிலத்தினில் நீங்கள் சிந்திடும் குருதி நிச்சயம் மீட்கும்
தாயக பூமி
(களத்தில் நிற்கும்—)

**சரணம்**

நெஞ்சிலிருப்பதோ தாயக கனவு
கொஞ்சி மகிழ்வதோ நம் தமிழ் மண்ணை
வெஞ்சினம் கொண்டீர் பகைவரைச் சாய்த்தீர்
அஞ்சியே நடுங்க அவர்கதை முடித்தீர்
(களத்தில் நிற்கும்...)

பின்னிப்பிணைந்த உறவினைப் பிரிந்தீர்
பிஞ்சுப் பாதங்கள் சிவந்திட நடந்தீர்
பிறந்த எம் மண்ணை பிடுங்கிட வந்தோர்
பிடரியில் குதிதட்டி முதுகிடச் செய்தீர்
(களத்தில் நிற்கும்...)

காவிய தலைவன் காவினில் மலர்ந்தீர்
சாவினில் சரிதம் படைத்திட விரைந்தீர்
பூவினில் உமைப்போல் புதுமைகள் இல்லை
பாவினில் பாடிட வார்த்தைகள் இல்லை
(களத்தில் நிற்கும்...)

பாடலாசிரியர் : சலோமை
பாடியவர் : சி. கௌசி

**பல்லவி**

காவிய கானங்கள் கேட்கும் - வீரர்
கால்களில் வேகங்கள் சேரும்
(காவிய கானங்கள்...)

**சரணம்**

வீரவேங்கைகள் மூச்சில் - புலிக்கொடி
வீசி விடுதலை பாடும்
வேகமெனக் காற்றில் ஆடும் - பெரும்
தடைகள் வருகின்ற வேளைப்பொழுதும்
துணிவுடன் வேங்கைகள் பாயும்
எதிரி கலங்கிட எல்லைகள் மீளும்
(காவிய கானங்கள்...)

வீசி வருகின்ற காற்றில் - விரிகின்ற
வாச மலர்களின் தேகம்
நம் வீரர் குருதியில் ஊறும்
வீரர் விழுகின்ற வேளைப்பொழுதும்
வீறுடன் வீதிகள் பார்க்கும் - நம்
வீரர் அணி நடை கேட்கும்
(காவிய கானங்கள்...)

அஞ்சி மடிந்திடா நெஞ்சில் - என்றும்
குண்டு சுமந்தவர் வீரர்
திடம் கொண்டு புனைந்தவர் ஆரம் - பெரும்
தடைகள் வருகின்ற வேளைப் பொழுதும்
வேள்விகள் ஆயிரம் காணும் - பல
வெற்றி விருதுகள் பூணும்
(காவிய கானங்கள்...)

பாடலாசிரியர் : கொலின்ஸ்
பாடியவர் : கொலின்ஸ்

**பல்லவி**

வேங்கைகளே வேங்கைகளே
விடுதலைத் தீயில் வேகி எரிகின்ற வேங்கைகளே
வேங்கைகளே வேங்கைகளே
வீரகாவியம் படைத்திடும் விடுதலை வேங்கைகளே
(வேங்கைகளே வேங்கைகளே...)

**சரணம்**

அருகில் நிற்பவர் வீழ்கையிலே
ஆவி துடிப்பதை யாரறிவார்
உயிர் பிரிகின்ற போதினிலே – உம்
உள்ளக் கிடக்கையை யாரறிவார்
அன்னை தந்தை அன்புச் சுற்றம்
ஆசை உறவுகள் பாசமுண்டு
மண்ணை மீட்கவே விட்டெறிந்தீர் யாரறிவார்
(வேங்கைகளே வேங்கைகளே...)

கொட்டும் மழையும் பனிக்குளிரும் – உமை
கொடுமை செய்வதை யாரறிவார்
எரிக்கும் வெயிலில் நடக்கையிலே – உம்
நாவறள்வதை யாரறிவார்
நாங்கள் விடிவை காணும் நிலைக்காய்
நீங்கள் விழிகளை மூடுகின்றீர்
சந்தனக் காற்றாய் வீசிடுவீர் – எம்
மூச்சினில் கலந்து உயிரளிப்பீர்
(வேங்கைகளே வேங்கைகளே...)

## விடியலைத்தேடும் பறவைகள் பாடல்கள்

பாடலாசிரியர் : சாந்தி
பாடியவர்கள் : ச. மேரின் வேஜினி, சி. கௌசி

பல்லவி

கல்வியும் எங்கள் மூலதனம் – அதில்
கத்தி வைக்கிறது ஆளுமினம்
(கல்வியும் எங்கள்...)

சரணம்

பள்ளிக்கூடங்கள் அகதியானது
படிக்கும் பாடங்கள் அழுகையானது
அகதி முகாமில் அழுகின்ற விளக்கில்
படிக்கிறோம்....
ஆளுவோரின் கத்தி கீறக் குருதி வரும்
துடிக்கிறோம்
(கல்வியும் எங்கள்...)

குப்பி விளக்குகள் காற்றில் அணைந்தன
உப்பு நீரினால் விழிகள் நனைந்தன
வானத்து விளக்கு வருமென்று நினைத்து
நடக்கிறோம்...
வாசலில் வெடிக்கும் குண்டு ஆசைகள் கருகும்
துடிக்கிறோம்...
(கல்வியும் எங்கள்...)

திட்டமிட்டு பல சதிகள் தீட்டினர்
வெட்டிவீழ்த்திட வழிகள் காட்டினர்
கனவுகள் கிழிந்து தரையினில் கிடந்து
துடிக்குதே...
எதிர் காலத்தின் கழுத்தை பேரினவாதம்
நெரிக்குதே...
(கல்வியும் எங்கள் —)

புத்தகத் தாள்கள் எதிரில் விரிந்தன
செத்தவர் முகமே அருகில் தெரிந்தன
போருக்குப் படிப்பா படித்திடப் போரா
கேள்விகள்...
பதில் ஊருக்குத் தெரிந்தால் இனியும் அணுகுமா
தோல்விகள்...

(கல்வியும் எங்கள்...)

□ □ □

## கரும்புலிகள் பாடல்கள்

பாடலாசிரியர்: புதுவை இரத்தினதுரை
பாடியவர் : வர்ண. ராமேஸ்வரன்

### பல்லவி

தாயக மண்ணின் காற்றே! என்னில் வீசம்மா – நான்
சாகும் நேரம் கடலே! நீயும் மூசம்மா
போரில் குதித்த தாயக மண்ணே பேசம்மா – கரும்
புலியிவன் பாடும் பாடலை எங்கும் பாடம்மா

(தாயக மண்ணின்...)

### சரணம்

நாளையிந்த நாட்டையாளும்சின்னப் பூக்களே! – நீங்கள்
நம்பவேண்டும் நாளைதமிழ் ஈழமென்றுமே
நீங்கள்வாழ வேண்டுமென்றே நான் வெடிக்கிறேன் – மாமன்
நெஞ்சிலுள்ள கனவுகளைத் தான் படிக்கிறேன்.

சின்னச் சின்னப் பூக்களெல்லாம் வாருங்கள் – தமிழ்
தேசம் வெல்ல வேண்டுமென்று சேருங்கள்.

(தாயக மண்ணின்...)

நேற்றுவரை அடுப்படியில் நீயுறங்கினாய் – உந்தன்
நீளவிழி மைகரைய நீ கலங்கினாய்
ஆற்றலுள்ள தலைவன்வழி காட்டி நிற்கிறான் – எந்தன்
அன்புத் தங்கை அச்சமில்லை என்றெழும்புவாய்.

உங்களுக்காய் இன்று போரைத் தொடுக்கிறேன் – இந்த
ஊருலகம் அறியாமல் வெடிக்கிறேன்.

(தாயக மண்ணின்...)

அகதியாகி உலகமெங்கும் அலையும் தோழனே – இங்கும்
அச்சத்தோடு ஒதுங்கிவாழும் எந்தன் நண்பனே!
பிச்சையேற்று அடிமையாக வாழும் வாழ்வினை – தூக்கிப்
போட்டெரித்து விட்டெழும்பு புலிகள் சேனையில்.

மானமதே வாழ்வு தரும் என்றறிந்திடு – வெடி
மருந்துடனே நான் புகுந்தேன் கண்திறந்திடு.

(தாயக மண்ணின்...)

□ □ □

பாடலாசிரியர்: புதுவை இரத்தினதுரை
பாடியவர்கள் : பார்வதி சிவபாதம், குமாரசாமி

பல்லவி

**போ**ரம்மா!

போரம்மா
உனையன்றி யாரம்மா?

சரணம்

செந்தணலில் வெந்திடினும்
எங்கள் பகை கொல்வோம்
தேடிவரும் எங்கள் பகை
ஓடிவிடச் செய்வோம்
அண்ணன் பெயர் சொல்வோம்
அச்சமில்லை என்போம்
இங்கு தமிழீழமது
பொங்கி வர வெல்வோம்

(போரம்மா...)

அண்ணன் பிர பாகரனின்
கண்ணில் எழும் பொறிகள்
ஆணையிடும் போதினிலே
ஆடும் கரும் புலிகள்
வெஞ்சபதம் செய்வோம்
வெடிகளென ஆவோம்
எங்களுயிர் தந்தெமது
எதிரிகளைக் கொல்வோம்

(போரம்மா...)

மின்னல் தன்னைக் கண்ணில் கொண்டு
வீசும் காற்றின் வேகம் கொண்டு
மண்ணில் வந்த வேங்கை அம்மா - போரம்மா
மண்ணில் வந்த வேங்கை அம்மா - நாங்கள்
மண்ணில் வந்த வேங்கை அம்மா

அண்ணன் சொன்ன வேதம் கேட்டு
விண்ணைக் கூட மண்ணில் வீழ்த்தி
ஆடும் கரும் புலிகள் அம்மா - போரம்மா
ஆடும் கரும் புலிகள் அம்மா - நாங்கள்
ஆடும் கரும் புலிகள் அம்மா

போரம்மா!

□ □ □

பாடலாசிரியர்: புதுவை இரத்தினதுரை
பாடியவர் : சிட்டு

தொகையறா

ஊரறியாமலே......உண்மைகள் கலங்கும்
ஒருபெரும் சரித்திரம் ஊமையாய் உறங்கும்
வேருக்கு மட்டுமே......விழுதினைப் புரியும்
வெடிமருந் தேற்றிய வேங்கையைத் தெரியும்.

பல்லவி

சாவைத்தன் தோள்மீது தாங்கிய காவியச்
சந்தன மேனிகளே – உங்கள்
ஆவிகலங்கிய அக்கணப் போதினில்
ஆரை நினைத்தீரோ?

வாசலில் காற்றென வீசுங்கள் – உங்கள்
வாய்திறந்தோர் வார்த்தை பேசுங்கள்.

(சாவைத்தன் தோள்மீது...)

சரணம்

வென்றிடவே கரும் வேங்கைகள் ஆகிய
வீரக் கொழுந்துகளே! – எம்மைக்
கொன்றவர் மீதினில் குண்டெனப் பாய்கையில்
என்ன நினைத்தீரோ?

(சாவைத்தன் தோள்மீது...)

தாயகத் தாகங்கள் தாங்கிய நெஞ்சினில்
சாவைச் சுமந்தவரே! – உங்கள்
தேகங்கள் தீயினில் வேகின்ற நேரத்தில்
ஆரை நினைத்தீரோ?

(சாவைத்தன் தோள்மீது...)

தாலாட்டுப் பாடியே தன்முலை யூட்டிய
தாயை நினைத்தீரோ – உங்கள்
காலாறத் தோள்மீது தாங்கிய தந்தையின்
கையை நினைத்தீரோ?

(சாவைத்தன் தோள்மீது...)

நாளும் விடுதலைத் தீயில் குளித்திடும்
நாயகனை நினைத்தீரோ – உங்கள்
தோளைத் தடவியே "சென்றிடு" என்றவன்
சோகம்தனை நினைத்தீரோ?

(சாவைத்தன் தோள்மீது...)

□ □ □

## கரும்புலிகள் பாடல்கள்

பாடலாசிரியர்: புதுவை இரத்தினதுரை
பாடியவர் : சாந்தன்

### பல்லவி

இங்கு வந்து பிறந்த பின்பே
இருந்த இடம் தெரியும் - நாளை
சென்று விடும் தேதி சொல்ல
இங்கெவரால்......முடியும்?

வாழ்க்கை யென்னும் பயணம் - இதை
மாற்றிடவா முடியும்?
(இங்கு வந்து...)

### சரணம்

பூமியிலே..... சாகும் தேதி யாருக்கிங்கு தெரியும்—கரும்
புலிகளுக்கு மட்டும்தானே போகும் தேதி புரியும்!
சாமிகளும் வாழ்த்திவிடும் சரித்திரங்கள் இவர்கள்- தமிழ்
சந்ததியில் அழியாத சத்தியத்தின் சுவர்கள்.
(இங்கு வந்து...)

வாழ்வினிலே வசந்தகாலம் துறந்தவர்கள் சிலரே - தினம்
வாசலிலே...இளமைராகம் மறந்தவர்கள் சிலரே
கரும்புலிகள் விரும்பியிங்கு இருப்பிழந்து போவார்
—எங்கள்
கண்ணெதிரே நின்றபின்னர் உருக்குலைந்து போவார்.
(இங்கு வந்து...)

தோளிலேற்றிப் போவதற்கு நாலுபேர்கள் வேண்டும்
—இந்தத்
தோள்களின்றிக் கரும்புலிகள் தீயின்வாய்கள் தீண்டும்
வாழும்காலம் நீள்வதிலே......வந்திடுமா பெருமை?
—இல்லை
வாய்கள்நூறு போற்றிப்பாடச் சாவதுதான் பெருமை.
(இங்கு வந்து...)

அச்சமின்றிக் குண்டணைத்து ஆடிப்பாடிப் போவார்
– எங்கள்
அண்ணன்பெயர் சொல்லிச்சொல்லி கரும்புலிகள்
சாவார்
சக்கைவண்டி தன்னிலேறிச் சரித்திரங்கள் போவார்
– தமிழ்ச்
சந்ததியின் வாழ்வுக்காகத் தங்களுயிர் ஈவார்.
(இங்கு வந்து...)

□ □ □

## கரும்புலிகள் பாடல்கள்

பாடலாசிரியர்: புதுவை இரத்தினதுரை
பாடியவர்கள் : வர்ண. ராமேஸ்வரன், சிட்டு.

பல்லவி

எதிரியின் குருதியில் குளிப்போம் – அம்மா
எரிமலை யாகியே விழிப்போம்
புதியதோர் சரித்திரம் படைப்போம் – கரும்
புலியென வாகியே நடப்போம்.
(எதிரியின் குருதியில்...)

சரணம்

தென்றல் காற்றும் புயலாகி – எங்கள்
தேசம் அசைந்த தம்மா – இங்கு
சின்னப் பூவும் தீயாகி – எட்டுத்
திசையும் சிவந்த தம்மா.

போர்க்களம் மீதினில் பாடுவோம் – கரும்
புலியென வாகியே ஆடுவோம்.
(எதிரியின் குருதியில்...)

போர்முரசு சிங்கே எழுந்திடவே – கரும்
புலிகள் நிமிர்ந்திடுவோம் – பூமி
யாரிவர் என்றே வியந்திடவே – நெருப்
பாகியே எரிந்திடுவோம்.

வசந்தத்தின் வாசலைத் துறப்போம் – புது
வரலா றாகியே பிறப்போம்.
(எதிரியின் குருதியில்...)

சந்ததிக் கானதோர் சாவாகி – ஒரு
சரித்திரம் எழுதிடுவோம் – நாங்கள்

சிந்திடும் குருதிகள் நீராகி – எம்
தேசத்தில் விழுதிடுவோம்.

பாயும் கரும்புலி வேர்க்காது – பிர
பாகரன் சேனைகள் தோற்காது.
(எதிரியின் குருதியில்...)

□ □ □

பாடலாசிரியர்: புதுவை இரத்தினதுரை
பாடியவர் : விஜயலட்சுமி

பல்லவி

வாய்விட்டு பேர்சொல்லி அழமுடியாது - வரும்
வார்த்தைகளால் உமைத் தொழமுடியாது
தாய்க்கும்தன் பிள்ளையின் முகம் தெரியாது - எங்கள்
தலைமுறை உங்களின் பெயரறியாது.
(வாய்விட்டு...)

சரணம்

நேற்றுவரை யிங்கு பூத்திருந்தீர் - பெரும்
நெருப்பெனப் போகவா காத்திருந்தீர்
போற்றியே பாடிட மொழிகளில்லை - கரும்
புலிகளின் நினைவுகள் அழிவதில்லை.
(வாய்விட்டு...)

காற்றுடன் காற்றெனப் போனீர்கள் - அந்தக்
கடலிலும் அலையென ஆனீர்கள்
வேற்றுடலோ டிங்கு வாருங்கள் - உங்கள்
வேரினில் நீர்தெளித் தாடுங்கள்.
(வாய்விட்டு...)

எதிரிக்கு நீங்களோ வெடிகுண்டு - உம்மை
இழந்தபின் இருக்கிறோம் இடியுண்டு
விதியினை மாற்றிய புலியென்று இங்கு
வீசிடும் காற்றிலும் பெயருண்டு.
(வாய்விட்டு...)

இந்தமண் யாருக்கும் பணியாது - தமிழ்
ஈழமண் எதிரிமுன் குனியாது
பொங்கிடும் உணர்வுகள் உறையாது - கரும்
புலிகளின் வேகங்கள் குறையாது.
(வாய்விட்டு...)

## கரும்புலிகள் பாடல்கள்

பாடலாசிரியர்: புதுவை இரத்தினதுரை
பாடியவர்கள் : சாந்தன், பார்வதி சிவபாதம்.

**வசனம்**

காற்றாகி வந்தோம் கடலாகி வந்தோம்
காதோரம் ஒருசேதி சொல்வோம் – கரும்
புலியாகி நின்றோம் புயலாகி வென்றோம்
புரியாத புதிராகிச் சென்றோம்.

**பல்லவி**

எம்மை நினைத்து யாரும் கலங்கக்கூடாது – இனி
இங்கே மலரும் சின்னப் பூக்கள் வாடாது
கண்ணில் வழியும் நீரைத் துடைத்து வாருங்கள்- எங்கள்
காவிய நாயகன் பாதையிலே அணிசேருங்கள்.
(எம்மை நினைத்து...)

**சரணம்**

வாழும் போதில் மானத்தோடு
வாழ்பவன் தானே தமிழன் - தன்
வாசலில் அடிமைச் சேவகம் செய்து
வாழ்பவன் என்ன மனிதன்
வழியில் இடறும் பகைகள் எரிய
வருக வருக தமிழா - உன்
விழியில் வழியும் நீரைத் துடைத்து
வெளியில் வருக தமிழா. (எம்மை நினைத்து...)

காற்றும் நிலவும் யாருக் கெனினும்
கைகள் காட்டுவ தில்லை - நாங்கள்
போகும் திசையில் சாகும் வரையில்
புலிகள் பணிவதும் இல்லை
மீண்டும் மீண்டும் புதிதாய் நாங்கள்
முளைப்போம் இந்த மண்ணில் - எங்கள்
மூச்சும் இந்தக் காற்றில் கலந்து
மூட்டும் தீயைக் கண்ணில். (எம்மை நினைத்து...)

## கரும்புலிகள் பாடல்கள்

பாடலாசிரியர்: புதுவை இரத்தினதுரை
பாடியவர் : மாதவன்

பல்லவி

தலைகள் குனியும் நிலையில் இங்கே
புலிகள் இல்லையடா - யாரும்
விலைகள் பேசும் நிலையில் எங்கள்
தலைவன் இல்லையடா.

இதுநேரம்......... வேரோடு
இனிமேலும்.............போராடு
தனிநாடு...............உருவாகும்
தமிழீழம்......... ... எமதாகும்.

(தலைகள் குனியும்...)

சரணம்

பிரபாகரனின் பிள்ளைகள் நாங்கள்
போர்க்களம் போகின்றோம் - எதிரி
வருவானா எதிர் வருவானா எனக்
கரும்புலி ஆகின்றோம்
வாருங்கள் அணிசேருங்கள் - ஒரு
வரலா றெழுதுங்கள்
பாடுங்கள் களம் ஆடுங்கள் - பிர
பாகரன் சேனையில் சேருங்கள்.

(தலைகள் குனியும்...)

காலமெமக் கொரு கட்டளையிட்டது
களத்தினில் வாவென்று - நஞ்சு
மாலை தரித்தொரு தேதிகுறித்தனம்
மானம் பெரிதென்று

வீசுங்கள் புயல் ஆகுங்கள் - பகை
வீடுகள் எரியுங்கள்
பேசுங்கள் புகழ் பாடுங்கள் -கரும்
புலிகளின் நாமங்கள் கூறுங்கள்.
(தலைகள் குனியும்...)

நாளை எமக்கொரு வாழ்வு கிடைத்திடும்
நம்பி இருந்திடுவோம் - தமிழ்
ஈழமெனும் எமதாகம் அடங்கிடும்
என்று எழுந்திடுவோம்
கூடுங்கள் கூத்தாடுங்கள் - புலிக்
குணத்தைக் காட்டுங்கள்
பாடுங்கள் களம் ஆடுங்கள் - பிர
பாகரன் சேணையில் சேருங்கள்.
(தலைகள் குனியும்...)

□ □ □

## கரும்புலிகள் பாடல்கள்

பாடலாசிரியர்: புதுவை இரத்தினதுரை
பாடியவர் : மோகனதாஸ்

**பல்லவி**

ஓரிரண்டு பேருக்குள்ளே உறங்கும் உண்மைகள் - இது
ஊருலகம் அறிந்திடாத உறவின் தன்மைகள்
பேரிரைச்சலோடு ஒரு வெடி வெடித்திடும் - இங்கு
போகவிடை கொடுத்த நெஞ்சம் துடிதுடித்திடும்.

(ஓரிரண்டு பேருக்குள்ளே...)

**சரணம்**

உங்களுக்கு மட்டும் எங்கள் உணர்வுகள் புரியும்
ஊமைகளாய் நாமிருக்கும் காரணம் தெரியும்
பொங்கும் மகிழ்வோடு நீங்கள் போய் விடுவீர்கள்
போனபின்னர் நாமழுவோம் யாரறிவீர்கள்?

(ஓரிரண்டு பேருக்குள்ளே...)

தாயகத்து மண்ணைத்தானே காதலித்தீர்கள்
சாவையெதிர் பார்த்துப் பார்த்துக் காத்திருந்தீர்கள்
பாயும் கரும் புலிகளாகிப் பகைமுடித்தீர்கள்
பாதகரின் நெஞ்சினிலே போய் வெடித்தீர்கள்

(ஓரிரண்டு பேருக்குள்ளே...)

கல்லுக்குள்ளே ஈரமுண்டு கசிவதும் உண்டு
கரும்புலிகள் விழிகளில் நீர் வழிவதும் உண்டு
அல்லும் பகல் அண்ணன் பெயரை உச்சரித்தீர்கள்
அந்தப் பெயர் சொல்லி மேனி சிலிர்த்தீர்கள்.

(ஓரிரண்டு பேருக்குள்ளே...)



"பாசத்தோடு ஈழமக்கள்
நெஞ்சை ஆளுவாய்
பிரபாகரனின் தம்பியாகி
என்றும் வாழுவாய்
ஆசையோடு தேசம் காண
வந்த வீரனே
கிட்டு அண்ணன்என்று பேரெடுத்த
எங்கள் தேவனே"

தமிழீழ விடுதலைப் புலிகள்
Liberation Tigers Of
TAMIL EELAM

வெளியீடு: வெளியீட்டுப்பிரிவு, தமிழீழ விடுதலைப் புலிகள்